# நகரத்தார் இதழ



பட்டினத்தடிகள்

லை-1989 சுக்ல

**ஆசிரியர்: சுப. செந்தமிழன்**

ஓம்
தாய் தீப்பாய்ந்தாளுக்குவணக்கம்
தமிழ் அன்னைக்கு வணக்கம்

# நகரத்தார் இதழ்

மலர்: 3  இதழ் 2

ஆசிரியர்:

சுப. செந்தமிழன்
5, யானைக்கார சந்து
மீனாட்சி அம்மன் கோவில் தெரு
(அம்மன் சன்னதி அருகில்)
மதுரை-1

ஜூலை - 1989
(சுக்ல - ஆடி)

நன்கொடை
தனி இதழ் ரூ. 2/-

தமிழ்நாடே வாழ்க—எம்
தாய்நாடே வாழ்க-
அமிழ்தாகிய இயலிசை கூத்தென்னும்
தமிழாகிய உயிர் தழையும் விழுமிய தமிழ்நாடே
வாழ்க!

-புரட்சிக் கவிஞர்
பாரதிதாசனார்

## "நகரத்தார் இதழ்" வழக்கு நிதி



நகரத்தார் இதழ் தொடங்கிய நாளிலிருந்து அதனைப் பதிய விடாமல் பல இடையூர்கள் செய்யப்பட்டன. நம் இனத்தைச் சார்ந்த பெரியவர் ஒருவரின் இடைவிடாத, தொடர்முயற்சியால் நகரத்தார் இதழ்மீது வழக்குப் போடப் பட்டுள்ளது. 'நகரத்தார் இதழ்' நட்டத்தில் நடந்து கொண் டுள்ளது. இது வரையில் ஏற்பட்டுள்ள நட்டம் ரூ. 15,000/ ஆகும். செய்தித்துறையில் ஆர்வம் நிறைந்தவன் நான் சமூ கத்திற்கு,நமது சமூகம் நாட்டிற்கு, சமூகத்திற்கு செய்துள்ள சேவைகளை, பணிகளை வெளிப்படுத்த வேண்டுமென்ற ஆர்வத்துடனே நகரத்தார் இதழை தொடங்கினேன். எனக்கு எத்தனை இடையூர்கள் செய்யப்பட்டாலும் தமிழ் அன்னை அருளாலும், உங்கள் ஆதரவாலும் அவைகளை வென்று நகரத்தார் இதழை தொடர்ந்து வெளியிடுவேன். நட்டத்தில் நடந்து கொண்டிருக்கும் நகரத்தார் இதழ் மீது வழக்கு தொடரப்பட்டிருப்பதின் காரணமாக நிதிச்சிக்கல் ஏற்பட்டுள்ளது. வழக்கு நடத்த நகரத்தார் இதழ் புதுப் பொழிவுடன் வெளிவர வழக்கு நிதி வழங்கியும் ஆதரவு தரு மாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

உங்கள் ஆதரவை என்றும் விரும்பும்

சுப. செந்தமிழன்.
5, யானைக்காரச் சந்து
மீனாட்சி அம்மன் கோவில் தெரு
(அம்மன் சன்னதி அருகில்)
மதுரை – 625001

# உங்கள் குரலே
# எமது தலையங்கம்

## பட்டினத்தடிகள் விழாவை பொது விழாவாக மாற்றவேண்டும்

ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு
தெய்வமெல்லாம் அன்றென்றிரு உயர்
பசித்தோர் முகம்பார் நல்லறமும் நட்பும்
நன்றென்றிரு நடு நீகாமலே நமக்கு இட்டபடி என்றிரு
மனமே உனக்கு பதேசமிதே

– பட்டினத்தடிகள்

பட்டினத்தடிகள் நல் தத்துவக் கருத்துக்களை சமூதாயத்திற்கு தந்து, நமது இனத்துக்குப் பெருமை சேர்த்துக் கொடுத்தவர். வாழ்க்கையின் உண்மைதத்துவத்தைஉலகுக்கு உணர்த்தியக் காட்டியவர். அந்த பெருமை மிக்கவருக்கு ஆண்டுதோறும் ஆடி மீ தஞ்சை மாவட்டத்தில் காவிரிப் பூம்பட்டினத்தில் விழா மிகச் சிறப்பாக நடத்தப்படுகின்றது இதில் நம்மவர்களில் பெரும்பான்மையினர் பங்கு கொள்ள முடிய வில்லை. காரணம், தொலைவும், செலவுமே ஆகும். காவிரிப் பூம்பட்டினத்தில் பட்டினத்தடிகள் விழாவை சிறப்பாக நடத்து வது போல் நமது பக்கஊர்களான காரைக்குடி, ராயவரம், பொன்னமராவதி, கீழச்சிவல்ப்பட்டி, தேவகோட்டை, நாட்டரசன்கோட்டை ஆகிய ஊர்களிலும்பட்டினத்தடிகள் திருவிழாவை சிறப்பாக நடத்த வேண்டும். இதனால் நம்மவர்கள் எல்லோரும் பங்கு கொண்டு பயன் பெற முடியும். நாடு முழுவதும் பட்டினத்தடிகள் பெருமையை உணரும் நமது இளைஞர்களும் பட்டினத்தடிகளின் சிறப்பை, வாழ்க்கை நெறியை அறிந்து கொள்ள முடியும் ‘எனது கருத்தை நமது இனப் பெரியவர்கள் கவனத்தில் கொண்டு செயலாக்குவார்கள் என்று நம்புகிறேன்.

இப்படிக்கு

ஆசிரியர்-நாச்சியப்பன், ஒக்கூர்

நா. அண்ணாமலை
13, திருவள்ளுவர் தெரு
சிவகங்கை-623560

நான் காவிரிப் பூம்பட்டினத்திற்கு பட்டினத்தடிகள் விழாவிற்கு சென்ற ஆண்டு சென்றிருந்தபொழுது சேகரித்த செய்திகளை கீழே தந்துள்ளேன்.

1. தஞ்சை மாவட்டம், சீர்காழி உட்கோட்டத்தில் பூம்புகார் சாலையில் உள்ளது காவிரிப் பூம்பட்டினம். மயிலாடுத்துறை (மாயவரம்)யிலிருந்து 25 கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது காவிரிப் பூம்பட்டினம். ஒரு காலத்தில் சோழ மன்னர்களின் தலைநகரமாக இவ்வூர் இருந்தது.

2. இங்குள்ள கோவலன்மேடும், கண்ணகி சிலையும் கோவலனும் கண்ணகியும் இங்கு வாழ்ந்தனர் என்பதற்கு சான்றாக எடுத்துக்காட்டாக உள்ளது.

3. இங்கே தான் பட்டினத்தடிகளும், இயற்பகைநாயனாரும் அவதரித்து வாழ்ந்தனர்.

4. திருஞான சம்பந்த சுவாமிகள் திருப்பதிகத்தை இவ்வூர் பெற்றுள்ளது இங்குள்ள கோவிலுக்கு பல்லவனீச்சரக்கோவில் என்று பெயர் அம்மனின் பெயர் சௌந்தர நாயகியாகும்.

5. இக்கோவில் தமிழக அரசின் இந்து அறநிலைய பாது காப்புத்துறையின் கீழுள்ளது.

6. பல்லவனீச்சரக் கோவிலின் உட்சுவறில் தென் மேற்குப் பகுதியில் பட்டினத்தடிகள், திருக்கோவில் உள்ளது.

7. அமராவதி புதூர் வயிநாகரம் குடும்பத்தினர் இக் கோவிலை திருப்பணி செய்து 20—5—1900ல் திருக்குட நன்னீராட்டு செய்துள்ளனர் மீண்டும் 20—8—1958லும் திருக்குட நன்னீராட்டு விழா நடந்துள்ளது.

8. காவிரிப் பூம்பட்டினத்தில் பட்டினத்தடிகள் திருவிழா ஒவ்வொரு ஆண்டும் ஆடி மாதத்தில் உத்திர நச்சத்திரத்தில் தொடங்கி உத்திராட நட்சத்திரத்தில்முடிவடையும் இந்த திருவிழாவை தற்பொழுது நா. அரு. கா. குடும்பத்தினர் சிறப்பாக நடத்தி வருகின்றனர்.

9. நம்மவர்கள் தங்குவதற்கு அனைத்து வசதிகளுடனும் கூடிய நகர விடுதி இங்குள்ளது. கண்டனூர் நா. அரு. கா. மகாதேவ காசிச் செட்டியார் நகரத்தார்களிடம் பண வசூல் செய்து இந்த நகர விடுதியை கட்டினார்கள்.

## காவிரிப்பூம்பட்டினம் நகர விடுதி

காவிரிப்பூம்பட்டினம் நகர விடுதி அனைத்து வசதிகளும் கொண்டது. இந்த விடுதி 1935ம் ஆண்டிற்கு முன் ஏற்பட்டது. நகரத்தார்களிடம் வசூல் செய்து கண்டனூர் நா. அரு.கா.மகாதேவகாசிச்செட்டியார் அவர்களால் கட்டப்பட்டது. ஆண்கள், பெண்கள் தனித்தனியாக தங்கிகொள்ள வசதி உள்ளது. தனியாகச் சமையல் செய்து கொள்ள விரும்புவர்களுக்கு வசதியாக ஏராளமான அடுப்புகள் உள்ளது. தனியாக சமையல் செய்ய இயலாதவர்கள் நகர விடுதியில் அதற்குரிய கட்டணம் செலுத்தி உண்ணலாம். ஒரு தடவை மகமை செலுத்தி விட்டால் எத்தனைநாட்கள் வேண்டுமானாலும் நகரவிடுதியில் தங்கலாம். இந்த நகர விடுதி நா. அரு. கா நாச்சியப்ப செட்டியார் அவர்கள், புதுப்பட்டி நா. க. ராம. ராமசாமி செட்டியார் அவர்கள், ஆத்தங்குடி விகடம் காசிச் செட்டியார் அவர்கள், தேவகோட்டை மு. நா. சுப்பையா செட்டியார் அவர்கள் ஆகியோர் முயற்சியால் புதுப்பிக்கப்பட்டது.

---

## நாம் பார்க்க வேண்டிய இடம்
## (பூம்புகார்)

K. வைத்யநாதன் B.Sc
மதகுபட்டி

தஞ்சை மாவட்டம் மாயவரத்திலிருந்து 29 கி.மீ தொலைவிலும், பட்டினத்தடிகள் அவதரித்த திருவெண்காட்டிலிருந்து 4 கி.மீ. தொலைவிலுள்ளது. பண்டைப் புகாரின் சிறப்பை பட்டினப்பாலை, அகநானூறு, புறநானூறு, சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய நூல்கள் பூம்புகாரைப் பற்றி கூறுகின்றது. மருவூர்ப்பாக்கம் என்னும் கடற்கரைப்பகுதியும், பட்டினப்பாக்கம் பகுதியும் பண்டைய பூம்புகார் ஆகும். 1976ல் அகழ்ந்து காணப்பட்ட செங்கற் கட்டப்பகுதி பண்டைய புகார் பெருமையை நமக்கு விளக்குகின்றது. 1973ல் தி.மு.க அரசால் இங்கே ஒரு சிற்பக் கலைக் கூடம் அமைக்கப்பட்டது. இக்கலைக் கூடத்தில் கண்ணகி வரலாறு 49 சிற்பத் தொகுதி வாயிலாக விளக்கப்பட்டுள்ளது. சிலப்பதிகார நிகழ்ச்சிகளும் விளக்கப்பட்டுள்ளது. மாதவிக்கு நெடிய கற்சிலை அமைக்கப்பட்டுள்ளது. கலைக்கூடம் அருகில் இலஞ்சிமன்றம், பாவை மன்றம் நெடுங்கல் மன்றம் ஆகியவை உள்ளது. நெடுங்கல் மன்றத்தில் சுமார் 17 மீட்டர் உயரமுள்ள ஒரு நெடிய கற்றூணும் அதைச் சுற்றி 8 சிறிய கற்றூண்களும் உள்ளன. தற்காலச் சிற்பங்களும் உள்ளன.

# நாம் பார்க்கவேண்டிய இடங்கள் நாம் பார்க்க வேண்டிய ஆலயங்கள்

## தஞ்சை மாவட்டம், தென் ஆற்காடு மாவட்டம்

தொகுத்தவர் – சுப. செந்தமிழன்

**தஞ்சாவூர்:** தஞ்சை பெரியகோவில் (பிரகதீசுவரர் ஆலயம்) இராச இராசு சோழனால் கட்டப்பட்டது. இப் பெரியகோவில் கி பி 1003ல் ஆரம்பிக்கப்பட்டு கி பி 1010ல் முடிக்கப்பட்டது. இக்கோவில் அடிவாரம் முதல் விமானத்தின் ஸ்தூபி வரை கருங்கற்களால் ஆனது. நிலப்பரப்புக்கு மேல் உயர்ந்த கல் மேடை மீது இக்கோவில் அமைக்கப்பட்டுள்ளது. கருவறையின் அதிட்டானம் முதல் கலசப் பகுதி வரை இவ் விமானத்தின் உயரம் 61மீ (216 அடி) விமானத்தின் சிகரத்திலுள்ள தளக்கல் 81.3 டன் எடையுள்ள ஒரே கல்லாகும். இறைவன் சன்னதியின் நுழைவு வாயிலுள்ள துவார பாலகர்கள் சிற்பங்கள் ஒரே கல்லிலானவை. கருவறையின் முன் பகுதியிலுள்ள 3.7 மீட்டர் உயரமும், 6 மீட்டர் நீளமும், 2.5 மீட்டர் அகலமும் 25 டன் எடையும் கொண்டது. வெளிச்சுற்றின் தென்பகுதியில் தொல்பொருள் துறையினரின் காட்சிக்கூடம் உள்ளது.

**சரசுவதிமகால்:** அரண்மனையைச் சார்ந்துள்ளது. இம் மகாலில் கலைக்கூடம் ஒன்று 1951ல் அமைக்கப்பட்டது. இந்நூல்நிலையம் நாயக்கர் மன்னர்கள் காலத்தில் தொடங்கப்பட்டு இரண்டாம் சரபோஜி மன்னர் காலத்தில் விரிவு செய்யப்பட்டது. இந்த நூல் நிலையத்தில் தமிழ், தெலுங்கு சமசுகிருதம், மராத்தி மொழிகளில் ஓலைச்சுவடிகள் உள்ளது. இந்நூலகம் தஞ்சை மாவட்ட ஆட்சியரின் நிர்வாகத்தின் கீழுள்ளது. இங்கு நான்கு மொழிகளில் 22,456 ஏட்டுச்சுவடிகளும், தாள்களில் 20,540 சுவடிகளும் உள்ளன.

**தமிழ்ப்பல்கலைக்கழகம்:** 1981 செப்டம்பரில் தொடங்கப்பெற்றது. மொழிப்புலம், வளர் தமிழ்ப்புலம், கலைப்புலம், அறிவியல் புலம், சுவடிப்புலம் என்னும் புலன்களின் கீழ் ஆய்வுத்துறைகள் உள்ளது. இங்கே 40,000க்கு மேற்பட்ட

நூல்கள் உள்ளன. இங்கேயிருந்து செய்திமலர் என்னும் இதழ் வெளியிடப் படுகின்றது. இந்தப் பல்கலைக்கழகத் திற்கு பலர் தனி நபர்கள் பெயரை இடச் சொல்கின்றனர். 'தமிழ்' என்ற பெயரை எடுத்துவிட்டு வேறு பெயரை இட்டால் அது அந்த தமிழ்ப் பெரியவர்களுக்கு செய்யும் பெரிய அநீதியாகும்.

மாயூரம்: (மயிலாடுதுறை) பூம்புகாரிலிருந்து 29 கி. மீ. தொலைவிலுள்ளது. இங்கு மாயூரநாதேசுவரர், அபயாம்பிகை ஆலயம் உள்ளது. பார்வதிதேவி மயிலாக சிவனை வழிப்பட்ட இடமாகும். ஆதியில் இக்கோவில் செங்கற்களால் கட்டப்பட்டது. செம்பியன் மாதேவியால் கற்கோவிலாக கட்டப்பட்டது. சென்ற நூற்றாண்டில் நகரத்தார்களால் திருப்பணி செய்யப்பெற்றது.

திருவாடுதுறை: மாயூரத்திலிருந்து 13 கி மீ தொலைவி லுள்ளது. கோவில் - மாசிலமணிசுவரர் கோவில் சைவப் பணி, தமிழ்ப்பணிஆற்று திருவாடுத்துறை மடம் கி பி 15ம் நூற்றாண்டில் நமச்சிவாய மூர்த்திகளால் நிறுவப்பெற்றது, திருக்கடவூர்:- மாயூரத்திலிருத்து 24 கி மீ தொலைவி லுள்ளது. சுவாமி - அமிர்தகடேசுவரர். அம்பிகை - வாலாம்பிகை இத்தலத்தில் காலசம்ஹாரமூர்த்தி (சிவபெரு மான்) அருளால் மார்க்கண்டேயர் காலனை வென்றதாக புராண வரலாறு கூறுகின்றது.

திருவாரூர்: தஞ்சாவூரிலிருந்து 50 கி மீ தியாகராச சுவாமி கள் கோவில் இங்குள்ளது கோவிலின் மத்தியில் வான்மீக நாதர் சன்னதி, தியாகராச சுவாமி சன்னதி உள்ளது. இக்கோவிலில் ஏழு கோபுரங்கள் உள்ளன. பெரியகோபுரம் கிழக்கு கோபுரம் இங்குதான் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டத் தொகை பாடினார். திருவாரூர் தேர் புகழ் பெற்றது. திருவாரூர் பெரிய தேர் சுமார் 200 டன் எடையுள்ளது.

சிதம்பரம்: தில்லைக்கோவில் கிபி 10ம் நூற்றாண்டிற்கும் 16ம் நூற்றாண்டிற்கும் இடையே கட்டப்பட்டது. தஞ்சை அரசர்களின் குல தெய்வமான சிற்றம்பலம் (சித்சபை) இக்கோவிலின் தொடக்க அமைப்பாகும். சிற்றம்பலம் சிதம்பர இரகசியத்தை கொண்டது. முதலாம் பராந்தக் சோழன் சிற்றம்பலத்திற்கு (கிபி 907-953)பொன்வேய்ந்தார் நூற்றுக்கல்மண்டபம் விக்கிரமசோழனால் கட்டப்பட்டது. நடராசர் - சிவகாமி வீற்றிருக்கும் அதிட்டாமை கல்லிலா னது. அதன் பக்கங்கள் மரங்களால் உருவாக்கப்பட்டது.

இதன் கூரை பொன்னால் வேயப்பட்டது. சித்திரசபைக்கு எதிரே கனகசபை உள்ளது. கனகசபை தாமிரத் தகடு களால் வேயப்பட்டது. கனகசபைக்கு தெற்கே நிருத்தசபை உள்ளது. இது நாட்டிய அறை எனப்படும். சிவன்-காளி நடனம் இராச்சியசபை (ஆயிரங்கால் மண்டபம்) இம்மண்ட பத்தில் ஒரே கல்லிலான பெரிய உயரமான தூண்கள் உள்ளன.

அண்ணாமலைப்பல்கலைக்கழகம்: சிதம்பர நகரிலிருந்து 1.5 கி மீ தொலைவிலுள்ளது. 1929ல் இராசா அண்ணாமலை செட்டியரால் நிறுவப்பெற்றது.

சீர்காழி: சிதம்பரத்திலிருந்து 19 கி மீ தொலைவிலுள்ளது. இறைவர் - சட்டைநாதர்: இறைவி - திரிபுரிசுந்தரி திருஞானசம்பந்தர் பிறந்த ஊர்.

வைத்தீசுவரன்கோவில்: சீர்காழியிலிருந்து 5 கிமீ தொலை விலுள்ளது. புள்ளிருக்கு வேளூர் என்பதன் இதன் பழைய பெயராகும். இறைவர்: வைத்தியநாதர். இறைவி: தையல்நாயகி இக்கோவிலில் ஆண்டில் 6 நாட்கள் கதிரவ னின் ஒளிக்கதிர்கள் அருள்மிகு வைத்தியநாதர் மீது விழும். இக்கோவிலில் முத்துக்குமாரச்சுவாமிக்கு தனிச் சன்னதி உள்ளது.

வடலூர்: சிதம்பரத்திற்கு அருகில் உள்ளது. இராமலிங்க அடிகள் கிபி 1865ல் வடலூரில் சமரச வேதாந்த சன்மார்க்க சங்கத்தை தோற்றுவித்தார். இவ்வூர் அவசியம் பார்க்க வேண்டிய ஊராகும்.

---

தஞ்சாவூர், திருச்சி, சிதம்பரம், மாயூரம், பூம்புகார் ஆகிய இடங்களிலுள்ள நகரவிடுதி, நகரத்தார் சங்க முகவரிகள்.

1) திருச்சி: நகரவிடுதி, 2 ஒற்றைமகால் தெரு, உச்சிப்பிள்ளையார்கோவில், திருச்சி-620002

2) தஞ்சாவூர்: நகரவிடுதி, பாம்பாட்டித்தெரு, தஞ்சாவூர் 613009

3) காவிரிப்பூம்பட்டினம்: நகரவிடுதி, காவிரிப் பூம்பட்டினம், பூம்புகார் - 609105 தஞ்சைமாவட்டம்.

4) சிதம்பரம்: நகரத்தார் சங்கம் 35 T.P கோவில் தெரு, சிதம்பரம் 608001 தென் ஆற்காடு மாவட்டம்.

5) மாயூரம்: நகரத்தார்சங்கம், 138 எண் 2 ரோடு மயிலாடுதுறை 60900. தஞ்சைமாவட்டம்

# தஞ்சையில் நமக்கு பெருமை சேர்ப்பவர்கள்

1) லெட்சுமி சீவல் தொழிற்சாலை நிர்வாக இயக்குநர் நா. அ. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள்

2) சக்திசன்ஸ், சக்தி டிரேடிங் கார்ப்பரேஷன் நிர்வாகப்பங்காளர் ஏ. அழகப்பன் அவர்கள்

3) தஞ்சை மருத்துவக்கல்லூரி பேராசிரியர் நடராசபுரம் எல். சி. சிவராமன் செட்டியார் அவர்கள்

4) டாக்டர் காரைக்குடி மெ மெய்யப்பன் அவர்கள்

5) டாக்டர் நற்சாந்துபட்டி. எஸ். பி. அண்ணாமலை அவர்கள்

6) ஜெமினி மிதிலைப்பட்டி பூ. பழநியப்பன் அவர்கள்

7) அண்ணாமலை பைனான்ஸ் அண்டு சிட்பண்ட் நிறுவன இயக்குநர் குருவிக்கொண்டான்பட்டி கே ஆர். அண்ணாமலை அவர்கள்

8) லெட்சுமி சீவல் தொழிற்சாலை நிருவாக இயக்குநர் எஸ். பி அண்ணாமலை அவர்கள்

9) தஞ்சை தமிழ்ப்பல்கலைக் பேராசிரியர் டாக்டர் இராம. சுந்தரம் அவர்கள்

10) பேருந்து நிறுவன அதிபர் வலையப்பட்டி பி. எல். ஏ. சிதம்பரம் செட்டியார் அவர்கள்

---

### நகரத்தார் பெருமை.

சீனா, பர்மா, சிங்கபுரம்
செல்வம் பொழியுமிலங்கை முதல்
நானாதிசையும் தமிழ்க் கொடையை
நாட்டிப் பாரத நாட்டினிலே
ஆனாப் பெருமும் புகழும் நல்
லறமும் வளர்க்கும் தன வணிகர்

கவிமணி தேசிய விநாயகம்பிள்ளை

---

# தொழில்:

M.S. முத்துராமன்
மீனா டிரசுலாண்டு
சிவகங்கை

வேலை இல்லை. வேலை கிடைக்கவில்லை என்று கூறுவதை விடுத்து நமக்கு நாமே வேலை தேடிக் கொண்டு, அதன் மூலம் வருமானத்தைப் பெருக்கிக் கொண்டு, வாழ்க்கை தரத்தை உயர்த்திக் கொள்வதே நாம் முன்னேற வழியாகும்.

வாகனத் துறை:

1. வாகனத் தொழிலுக்கு முதலில் வேண்டுவது (1) தொலைபேசி வசதி, (2) விசிட்டிங் கார்டுகள்.

2. வாகனத்தை வாங்குபவர்கள், விற்க விரும்புபவர்கள் முகவரியை சேகரித்து வைத்துக்கொள்ள வேண்டும்.

3. வாகனங்கள் வாங்குபவர்கள், விற்க விரும்புபவர்கள் எங்களை அணுகவும் என்று செய்தித்தாள்கள் வழியாக அடிக்கடி விளம்பரம் கொடுக்க வேண்டும்.

4. பைனான்சியர் (வட்டித் தொழில் புரிபவர்கள்) வழியாக வாகனத்தை, விலைக்கு வரும்பொழுது வாங்கி, பின் நல்ல விலைக்கு விற்க வேண்டும். இதற்கு தொழில் அனுபவமும், மிக்க விபரமும் தெரிந்திருக்க வேண்டும்.

5. உங்களிடம் ஒரு குறிப்பிட்ட வண்டி, குறிப்பிட்ட வருட வெளியீடு தேவை என்ற ஆர்டர், அதை வாங்க விரும்புபவரிடம் சிறு தொகையை முன்பணமாகப் பெற்றுக் கொண்டு பைனான்சு வழியாக காரை வாங்கி அதை நல்ல விலைக்கு விற்கலாம்.

6. வாகனத்தில் எவ்வித ரிப்பேரும் இல்லாமல் பார்த்து வாங்கி கொடுக்க வேண்டும். பொருள் நன்றாக இருந்தால் தான் வாங்க வரும் வாடிக்கையாளர்களின் எண்ணிக்கை பெருகி வரும்.

## ஆருடம்: பட்சிப் பார்த்து பலன் கூறுதல்.

லெ. பெரி. பெரியகருப்பன்
பி அழகாபுரி

உலகத்தில் உள்ள மக்களை அவரவர் பிறந்த நட்சத்திரத்தைக் கொண்டு ஐந்து பறவை (பஞ்ச பட்சி) களின் கீழ் அடக்குவர். அந்த ஐந்து பறவைகளும், அதற்குரிய நட்சத்திரங்களும், கீழே தரப்பட்டுள்ளன.

வல்லூறு: அசுவதி, பரணி, கார்த்திகை, ரோகினி, மிருகசீரிடம் ஆகிய நட்சத்திரங்களில் பிறந்தவர்களுக்கு உரிய பறவை வல்லூறு.

ஆந்தை: திருவாதிரை, புனர்பூசம், ஆயில்யம், மகம், பூரம்

காகம்: உத்திரம், அஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம்

கோழி: அனுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம்

மயில்: திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி

நீங்கள் பிறந்த நட்சத்திரங்களை உங்களுக்குரிய பறவையை முடிவு செய்து பலன் பார்த்து தெரிந்துகொள்ளலாம்.

நமக்குரிய பறவை உணவு உண்ணுகின்ற அல்லது அரசாளுகின்ற நேரத்தில் ஒரு காரியத்தை தொடங்கினால் அக்காரியம் எவ்வித தடங்கலும் இல்லாமல் எளிதாக நிறைவேறும். நமக்குரிய பறவை உணவு உண்ணுகின்ற மொத்த நேரம் பகலில் 2 மணி 24 நிமிடம், இரவில் 2 மணி 24 நிமிடம். அதுபோல் அரசாளும் நேரம் பகலில் 2 மணி 24 நிமிடம், இரவில் 2மணி 24 நிமிடம் நமக்குரிய பறவை உணவு உண்ணுகின்ற நேரம் எது? ஆளுகின்ற நேரம் எது? என்பதை; தெரிந்து செயல்பட்டால் நாம் நினைத்த காரியம் நிச்சயம் வெற்றிபெறும். இதுபற்றி தெளிவாக நினைத்த காரியம் நிச்சயம் வெற்றி என்னும் நூல் நமக்கு விளக்குகின்றது.

பட்சிப் பலன் பற்றிவிபரமாக தெரிந்துகொள்ள விரும்புபவர் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:-

## சமையல் மருந்துகள்

இராச குமாரி செந்தமிழன்

நாம் சமைக்க நாள்தோறும் பயன்படுத்தும் வெந்தயம் சீரகம், மிளகு, மஞ்சள், பெருங்காயம், கசகசா, கொத்தமல்லி ஆகியவைகள் நமக்கு நோய்த்தடுப்பு சமையல் பொருட்கள் ஆகும்.

மஞ்சள்: காலில் வரும் சேற்றுப்புண்களுக்கு மஞ்சள் கிழங்கை அரைத்துத்தடவினால் பலன் உடனே கிடைக்கும் சூடான பசும்பாலில் மஞ்சள் தூளைப் போட்டு குடித்து வந்தால் இருமல் நம்மை விட்டு நீங்கி விடும். மஞ்சளைபெண்கள் முகத்தில் தேய்த்துக் குளித்து வந்தால் முகத்தில் பூனைத்தோசம் போன்ற முடி முளைக்காது.

வெந்தயம்: வெந்தயத்தையும், புளித்த தயிரையும் அரைத்து தலையில் தேய்த்து சிறிது நேரம் ஊற விட்ட பிறகு குளித்தால் தலையில்இருக்கும் பொடுகு பறந்துபோய் விடும். வெந்தயம் உடலுக்கு குளிர்ச்சி தரும் சீத பேதியை வெந்தயம் நீக்கும்.

பெருங்காயம்: சிறிதளவு பெருங்காயத்தை நீரில் கரைத்துக் குடித்தால் வாய்வு பறந்தோடி விடும். வயிற்று வலி நீங்கி விடும். பெருங்காயத்தை சிறிதளவு நல்லெண்ணையில் போட்டு சுட வைத்து இளஞ் சூட்டுடன் காதில் விட்டால் காது வலி நீங்கும்.

மிளகு: மிளகைப் பொடி செய்து தண்ணீரில் போட்டு நன்றாகக் காய்ச்சி குடித்தால் அசீரணம், தொண்டைகம்மல், பேதி, சூடு ஆகிய நோய்கள் நீங்கும். கொஞ்சம் மிளகையும் கருப்பு வெள்ளத்தையும் சேர்த்து சாப்பிட்டால் சளி இருமல் குணமாகும்.

சீரகம்: சீரகம் நல்ல பசியைத் தரும், பித்தத்தை நீக்கும். சீரகத்தையும் பனங்கற்கண்டுத் தூளையும் சேர்த்துவறுத்து சாப்பிட்டால் வயிற்றுக்கடுப்பு குணமாகும். சீரகத் தண்ணீர் உடல் நலத்திற்கு ஏற்றது.

கசகசா: சிறிதளவு கசகசாவை பால்விட்டு அரைத்து, பாலில் கலக்கி குழந்தைக்கு கொடுத்தால் வயிற்றுப்போக்கு சீத பேதி நின்றுவிடும்.

கொத்தமல்லிவிதை: கொத்தமல்லி விதையை வெந்நீரில் போட்டு அரைத்து நெற்றியில் பற்றுப் போட்டால் தலை வலி நீங்கும். கொத்தமல்லிகாபி வாந்தி, தாகம் முதலியவைகளை நிறுத்தும்.

# காவிரிப் பூம்பட்டினத்தில்
# பட்டினத்தடிகள் திருவிழா

காவிரிப் பூம்பட்டினத்தில் பட்டினத்தடிகள் திருவிழா சுக்ல வருடம் ஆடி மீ 22உ (6—8—89) ஞாயிற்றுக்கிழமை முதல் ஆவணி மீ 1உ (17—8—89) வியாழக்கிழமை வரை சிறப்பாக நடைபெற உள்ளது.

**நிகழ்ச்சி விபரம்**

ஆடி மீ 22உ (6—8—89) ஞாயிறு - திருவெண்காடராகிய பட்டினத்தடிகள் திருவவதாரம்

ஆடி மீ 23உ (7—8—89) திங்கள் - சிவதீட்சை பெற்றுக் கொள்ளுதல்

ஆடி மீ 24உ (8—8—89) செவ்வாய் - திருவெண்காடர் திருக்கல்யாணம்

ஆடி மீ 25உ (9—8—89) புதன் - மருதவாணர் குழந்தையாய் எழுந்தருளல்

ஆடி மீ 26உ (10—8—89) வியாழன் - கப்பல் யாத்திரை துறவறம் மேற்கொள்ளுதல்

ஆடி மீ 27உ (11—8—89) வெள்ளி - அப்பம் அளித்தலும் வீடு தீப்பற்றி எரிதலும்

ஆடி மீ 28உ (12—8—89) சனி - ஞானகலாம்பிகை பரிபூரணமடைதல்

ஆடி மீ 29உ (13—8—89) ஞாயிறு - திருவாரூர்ப்பிள்ளை -யைப் பிழைப்பித்தல் இரவு கழுமரம் எரித்தல்

ஆடி மீ 30உ (14—8—89) திங்கள் - பத்திரக்கிரியாரும், நாயடியாரும், அடிகள் அருளால் மோட்சமடைதல்

ஆடி மீ 31உ (15—8—89) செவ்வாய் - பட்டினத்தடிகள் குருபூசை

ஆடி மீ 32உ (16—8—89) புதன் - பஞ்சமூர்த்திகளும், திருவெண்காடரும் இடபவாகனக் காட்சியுடன் தீர்த்தம் கொடுத்தல்

ஆவணிமீ 1உ (17—8—89) வியாழன் - ருத்ராபிஷேகமும் விடையாற்றியும்

## நமது செய்திகள்:



5—5—89 அன்று அலவாக்கோட்டை சிவன் கோவில் குடமுழுக்கு நன்னீராட்டுவிழா நடைபெற்றபோது எடுக்கப் பட்ட படம்.

மண்டலாபிஷேக விழாவும், மலர் வெளியீட்டு விழாவும்:-

1. நாட்டரசன்கோட்டை தீர்த்தார்குளம் அருள்மிகு தேசிக விநாயகர் கோவிலின் மண்டலாபிஷேக விழா 14—6—89 அன்று சிறப்பாக நடைபெற்றது. அவ்விழா வில் திருக்குட நன்னீராட்டு மலரை பொற்கிழிக்கவிஞர் அரு. சோமசுந்தரனார் வெளியிட்டார். பேராசிரியர் இராம. சிவசுப்பிரமணியன் அவர்கள் வரவேற்றுப் பேசி னார். திரு. லெ. கண்ணப்ப செட்டியார் அவர்கள் நன்றி கூற விழா இனிது நிறைவேறியது. விழா மலர் மிகச் சிறப் பாக உள்ளது.

2. சிறந்த எழுத்தாளரும் பேச்சாளரும், நூல் வெளி யீட்டாளருமான துணைப் பேராசிரியர் வ. தேனப்பன் அவர்கள் ஒன்பது நகரக் கோயில்கள் என்னும் தலைப்பில் ஆய்வு செய்து அளித்த கட்டுரைக்கு மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம் Pho என்னும் முனைவர் பட்டத்தினை 27—5—89 அன்று வழங்கி சிறப்பித்துள்ளது. அவருக்கு எமது நெஞ்சம் நிறைந்த வாழ்த்துக்களை தெரிவித்துக் கொள்கின்றோம்.

3. மதுரை நகரத்தார் இளைஞர் சங்கத்தின் சார்பாக இவ்வாண்டும் 4-6-89 அன்று நகர விடுதியில் இளைஞர் சங்கத்தின் துணைத் தலைவர் திரு. பழ. ராமசாமி நம் சமூக மாணவ, மாணவிகளுக்கு இலவச நோட்டுப் புத்தகங்கள் வழங்கினார்.

4. வெனாஹூர் கிராமம் அருள்மிகு மாசாத்து அய்யனார் திருக்கோவிலின் திருக்குட நன்னீராட்டு விழா 8-6-89 அன்று திருப்பணிக் குழுத் தலைவர் கோனாபட்டு ச. முரு. முருகப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது.

5. முனைவர் ஆறு. அழகப்பன் அவர்கள் இரண்டாவது முறையாக அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் ஆட்சிக்குழு உறுப்பினர்களில் ஒருவராக நியமனம் செய்யப்பட்டுள்ளார்.

### மகேசுவர பூசை:

சென்னை அம்பத்தூர் டி.ஐ. சைக்கிள் தொழிற்சாலை கோயில் மண்டபத்தில் கண்டனூர் பழநியப்ப செட்டியார் அவர்கள் முன்னிலையில் நகரத்தார் மகேசுவர பூசை பரிபாலன சபையின் சார்பாக 16ம் ஆண்டு மகேசுவரபூசை 13-8-89 அன்று சிறப்பாக நடைபெற உள்ளது.

### கூட்டுத்திருமணம் - அறிவிப்பு

நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் ஆதரவில் சுக்ல ஆண்டு ஆவணி மீ 22ஆம் நாள் (7-9-89) வியாழக்கிழமை பிள்ளையார்பட்டியில் கூட்டுத் திருமணம் நடைபெற உள்ளது. விண்ணப்பங்கள் அனுப்ப வேண்டிய முகவரி - நகரத்தார் சங்கம், 2. ஒத்தமால் தெரு, திருச்சி - 620 002

திருமணம்: மதுரை நகரத்தார் சங்க மேலாளரான AN. மெய்யப்பச் செட்டியார் அவர்களின் செல்வி மல்லிகா (B.A.)விற்கும், கண்டனூர் ப.அழ.பழ பெரி. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் செல்வன் C. அழகப்பன் BComக்கும் தேவகோட்டையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

கீழப்பூங்குடி நா.சொ.கண. சுப்பிரமணியன் செட்டியார் அவர்களுக்கு 2-6-89 அன்று அறுபதாம் ஆண்டு நிறைவு மணி விழா கீழப்பூங்குடியில் சிறப்பாக நடைபெற்றது.

## அறிவியல் வினாவும் விடையும்:

ஆசிரியர் - இல. இராமையா
நாட்டரசன்கோட்டை

1. 22 காரட் தங்கம் என்றால் என்ன?
தங்கத்தின் மொத்த அளவு 24 என்றால் 22 பங்கு தங்கம் 2 பங்கு செம்பு இதுவே 22 காரட் ஆகும். 18 பங்கு தங்கம் 4 பங்கு செம்பு

2. தரமான எவர்சில்வர் பாத்திரம் என்றால் என்ன?
தரமான தட்டுக்களில் 18 சதவிகிதம் குரோமியமும், 8 சதவித நிக்கலும் கலந்துள்ளது. இந்த கலவை தான் தரமானது தரக்குறைவான எவர் சில்வர் பாத்திரங்களில் குரோமியத்தின் அளவு கூடுதலாக இருக்கும் இது உடலுக்கு தீமையை உருவாக்கும்.

சம்பளம்: சொல்விளக்கம் பழங்காலத்தில் சம்பளமும், கூலமும் உப்புமாகக் கொடுக்கப் பெற்றது. கூலம் தானியம் (கூலமாக கொடுக்கப் பெற்றது கூலி) கூலத்தில் சிறந்தது. நெல் முதலின், நெல்வகையால் சிறந்த சம்பாவின் பெயராலும் சம்பளம் என்னும் பெயர் உண்டாயிற்று. சம்பு என்பது சிறந்த நெல் வகைக்கும் சிறந்த கோரை வகைக்கும் பெயர் நெல்லைக்குறிக்கும் செம்பு என்னும் பெயர் இன்று சம்பா என வழங்குகின்றது. அளம் என்பது உப்பு உப்பு விளைப் போர் அளவர் எனப்படுவர்

நன்றி-பாவாணர் - சொல்லாராய்ச்சிக் கட்டுரை

---

வாழ்நாளில் ஏற்படும் துயரங்களை குறைக்க ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்வதற்கன்றி வேறு எதற்காக நாம் உயிர் வாழுகிறோம்?

சியார்சு இலியட்டு

---

### இயற்கை எய்தினார்

மதுரை நகர விடுதி மேலாளர் காரைக்குடி சிவ.கி.நா. ராம.நா.கோவிந்தன்செட்டியார் அவர்களது துணைவியார் திருமதி மெய்யம்மை ஆச்சிஅவர்கள் 7–6—89 அன்று தமது 70 வயதில் காரைக்குடியில் காலமானார். அவர்களுக்கு கலைவரும், இராமசாமி, திருநாவுக்கரசு என்று இரு செல்வர்களும் உள்ளனர்.

# செட்டிநாடு

செட்டி நாடு



வெள்ளாறு வடக்காம்
மேற்குப் பிரான்மலையாம்
தெள்ளார் புனல் வைகை
தெற்காகும் ஒள்ளியசீர்
எட்டிக்கடல் கிழக்காம்
இஃதன்றோ நாட்டரண்சேர்
செட்டிநாடு எல்லையெனச் செப்பு

# ஆடிப்பெருக்கு



அன்னையின் அருளே வா! வா!
ஆடிப்பெருக்கே வா! வா!
பொன்னியின் புனலே வா! வா!
பொங்கும் பாலே வா! வா!

— கொத்தமங்கலம் சுப்பு

# வாழ்த்துக்கள்

1. சிவகங்கை அரசர் மேல்நிலைப் பள்ளியில் 1988-89ஆம் ஆண்டு நிகழ்ந்த 10ஆம் வகுப்புத் தேர்வில், சிவகங்கையில் வழக்கறிஞராக பணிபுரிந்து வரும் நாட்டரசன்கோட்டையை சார்ந்த K. சிவசுப்பிரமணியன் அவர்களின் செல்வன் சண்முக சிவசுப்பிரமணியன் 500க்கு 427 மதிப்பெண்கள் எடுத்து தேறியுள்ளார். ஆங்கிலத்தில் 100க்கு 95ம், தமிழில் 100க்கு 83ம் எடுத்து மேற்படி பாடங்களில் முதலாவதாக தேறியுள்ளார். அவருக்கு நகரத்தார் இதழ் தன் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கின்றது.

2. கொல்லங்குடி அழகாபுரியைச் சார்ந்த வடிவாம்பிகை நூற்பாலையில் காசாளராகப் பணிபுரியும் M. மெய்யப்பன் அவர்களின் செல்வன் 1988-89ம் ஆண்டு நிகழ்ந்த 10ம் வகுப்புத் தேர்வில் சிவகங்கை அரசர் மேல் நிலைப் பள்ளியில் 500க்கு 441 மதிப்பெண்கள் எடுத்து தேறியுள்ளார். அறிவியலில் 100க்கு 97ம், வரலாற்றில் பூகோளத்தில், 100க்கு 92ம் எடுத்து மேற்படி பாடங்களில் பள்ளியில் முதலாவதாக தேறியுள்ளார். அவருக்கு எமது பாராட்டுக்களை தெரிவித்துக்கொள்கின்றோம்.

திண்டுக்கல்: 28—5—89ல் திண்டுக்கல்லிலுள்ள நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் கூடி நகரத்தார் சங்கம் அமைத்தார்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| தலைவர் | - | மு.ப.மு. பழனியப்ப செட்டியார் | அவர்கள் | |
| துணைத் தலைவர்கள் | } | சோ. வயிரவன் | ,, | ,, |
| | | லெ. அரு. சுப்பையா | ,, | ,, |
| செயலாளர் | - | ஆ.வ. ராமநாதன் | ,, | ,, |
| உதவிச் செயலாளர் | - | சேவு. ராம. சுப்பையா | ,, | ,, |
| பொருளாளர் | - | ஆறு. ராம. சுந்தரம் | ,, | ,, |

மேலே கண்டவாறு நிருவாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தஞ்சாவூர்: தஞ்சாவூர் நகரத்தார் சங்கத்தின் ஆறாம் ஆண்டு விழாவும், மலர் வெளியீட்டு விழாவும் 28—5—89 அன்று நடைபெற்றது. சங்கத் தலைவர் PL.A. சிதம்பரம் செட்டியார் அவர்கள் தலைமை ஏற்க தொழிலதிபர் காசி செட்டியார் அவர்கள் மலரினை வெளியிட்டார்.



# சுவாமியே சரணம் ஐயப்பா

இந்த உலகத்தையும் அனைத்து கோளங்களையும் ஒரு சக்தி தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்துள்ளது. அந்த சக்தியைத் தான் அந்தந்த மதத்தவர்கள் அவர்கள் விருப்பப்படி வணங்குகின்றார்கள். மொத்தத்தில் சக்தி ஒன்று உள்ளதென்று அனைவரும் ஒப்புக்கொள்கிறார்கள். ஆஸ்திகனுக்கு கடவுள் நம்பிக்கை உண்டு. ஆனால் மற்றவற்றில் நம்பிக்கை இருக்காது. எதனையும் யோசித்துத்தான் செய்வான். இந்த இந்த காலங்களில் இதைச் செய்ய வேண்டும் இந்த இந்த இடங்களில் இப்படித்தான் நடந்து கொள்ள வேண்டும், ஒரு காரியத்தைச் செய்தால் அதனால் விளையும் நன்மை, தீமை என்ன என்று ஒவ்வொன்றையும் யோசித்தே செய்வான். பிள்ளையாருக்கு தோப்புக்கரணமும் முருகனுக்கு காவடியும், சிவனுக்கு விபூதியும், பெருமாளுக்கு நாமமும் என்று பாகுபடுத்தி அந்த அந்த இடத்திற்கு தக்கவாறு நடந்து கொள்வான். ஆனால் நாஸ்திகனுக்கு கடவுள் நம்பிக்கை மட்டும் இல்லை. மற்ற எல்லாவற்றையும் நம்பி உடனே செய்வான். கோயிலை இடி, பக்தர்களை கேலிசெய் என்றுதலைவன் உத்திரவிட்டால்உடனே செய்வான். அதனால் அவனுக்கு ஏற்படும் நன்மை தீமைகளை யோசிக்க மாட்டான். ஒருவன் கடவுள் உண்டுஎன்று நம்பி நடந்து கொண்டால் அதனால் நாஸ்திகனுக்குவிளையக் கூடிய தீமை என்ன? நாஸ்திகன் வருமானம் குறைந்து விடுமா? நாஸ்திகன் குடும்பம் அழிந்து விடுமா? இந்த இடத்தில் நம் முன்னோர்கள் முன்யோசனையை நாம் பாராட்டாமல் இருக்க முடியாது. எங்கே நம் பேரன் பேத்திகள் நாஸ்திகர்களாக மாறிவிடுவார்களோ என்று கருதி ஒவ்வொரு செட்டியார் வீடுகளிலும் சாமிஅறை என்று ஒன்றை ஏற்படுத்தி நம் கண் முன்னால் வாழ்ந்து தெய்வமாகி உள்ள முன்னோர்களுக்கு பேழைப் பெட்டி வைத்து ஒவ்வொரு வருடமும் படைத்து வழிபாடுசெய்யவேண்டும் என்றநடைமுறையை ஏற்படுத்தி உள்ளார்கள். அவ்விதம் வீடுறை தெய்வங்களை மறக்காமல் வழிபட்டு வரும் நகரத்தார்கள் மேன்மேலும் வாழ்க்கையில் சிறப்படைந்து வருவது நாம் கண் கூடாக காணும் ஒரு காட்சியாகும்.

ஐயா, நாசுதிக நம் இன நண்பர்களே! உங்கள் கொள்கை என்ன? சாதி மதவித்தியாசம் கூடாது. எல்லோரும் சமம். ஏற்றத் தாழ்வு கூடாது என்ற கம்யூனிச தத்துவத்தைத் தானே கூறுகிறீர்கள். ஒரு செயலில் நிபுணத்துவம் பெறுவதற்கு முன்பு பயிற்சி வேண்டும். முதலில் நம்பிக்கை இல்லாமல் தான் பயிற்சிகளில் கலந்து கொண்டு தேர்வு பெற்று கலெக்டராகவும், போலீஸ் அதிகாரியாகவும், படைத் தளபதிகளாகவும் ஆகிறார்கள். பயிற்சியில் கலந்துகொண்டவர்கள் எல்லாம் உடனே தேர்வடைவதில்லை. அவ்விதம் அதிகாரிகளாக வேண்டும் என்று குறிக்கோள் உள்ளவர்கள் திரும்ப திரும்ப பலமுறை கலந்து கொண்டு நினைத்ததை அடைக்கிறார்கள். அவ்விதம் ஒரு பயிற்சியாக ஒரு முறை ஐயப்பன் விரதம் இருந்து பாருங்களேன். கம்யூனிச தத்துவங்களுக்கு மேலாக விஞ்ஞான ரீதியிலும் ஐயப்பன்விரதம் நம் உடலுக்கு நன்மை பயக்கிறது. எனக்கு தெரிந்த காரணங்களை கூறுகிறேன்.

1. சாதி மத வித்தியாசமின்றி இந்துக்களும், முஸ்லீம்களும்கிறித்துவர்களும் ஐயப்பன் கோயிலுக்குவருகிறார்கள்

2. ஏற்றத் தாழ்வில்லாமல், ஏழை பணக்காரன் என்ற வித்தியாசமில்லாமல் எல்லோரும் கலர் ஆடை அணிகிறார்கள். ஒருவருக்கு மற்றவர் சாமி தான். ஐயப்பன் தான் மனதில் அகங்காரம் நீங்கி ஒருவர் பாதம் மற்றவர் பணிந்து வணங்குகிறார்கள். எல்லோரும் நடந்தே சென்று வரிசை வரிசையாகச் சென்று சபரிகிரி சாஸ்தாவை தரிசிக்கிறார்கள்.

3. விரதமிருக்கும் இரண்டு மாதமும் ஐயப்பன் என்ற மந்திரத்தை அடிக்கடி உச்சரித்து மனதை அலைய விடாமல் ஒரே இடத்தில் நிலைநிறுத்த முடிகிறது: இந்த மன உறுதி மற்ற பத்து மாதங்களில் செய்யும் செயல்களில் காட்ட முடிகிறது.

4. விரதமிருக்கும் காலங்களில் காலையிலும் மாலையிலும் இரு முறை குளிப்பதால் உடல் அழுக்கு நீங்குவதுடன் உடல் உஷ்ணமும் குறைகிறது. மிகவும் குளிர்காலங்களான கார்த்திகை, மார்கழி ஆகிய இரு மாதங்களில் குளிர் நீரில் குளித்து உடல் பழகி விடுவதால் மற்ற மாதங்களில் தண்ணீரால் நம் உடலுக்கு எவ்வித தீங்கும் ஏற்படாது.

5. விரத காலங்களில் காலில் செருப்பில்லாமல் நடப்பதால் நம்சுற்றுப்புறசூழ்நிலையில் புழுதியில் உண்டாகும்நோய்க்கிருமி தாக்குதலை நம் உடல் சமாளித்துக் கொள்கிறது. பின் வரும் மாதங்களில் எவ்வித நோயும் அணுகாது. [இதற்காக சாக்கடைகளிலும், அசிங்கங்களிலும்நடக்கலாம் என்று நான் கூறவில்லை]

6. முக்கியமாக குருவை மதித்து மாலை அணிந்து கொண்டு, இருமுடி கட்டிக்கொண்டு, மாலை கழற்றிக்கொண்டு விரதத்தை முடித்துக் கொள்வதால் பெரியவர்களை மதிக்கவேண்டும் என்ற மனப்பான்மை வளர்கிறது.

7. நமக்கு வேண்டிய உணவை பிறர் தயவில்லாமல் நாமே சுமந்துகொண்டு ஓரிரு தினங்கள் மிருகங்கள் வாழும் வனச் சூழ்நிலையில் இரவும், பகலும் பயமின்றி நடந்து போவதால் நமக்கு வேண்டியவற்றை நாமே தேடவேண்டும் என்ற சுய உணர்வும், தைரியமும் ஒவ்வொருவருக்கும் ஏற்படுகிறது. எதற்கும் அடுத்தவரைச்சார்ந்திருக்கவேண்டும் என்ற கோழைத்தனம் மறைந்து விடுகிறது.

8. முன்முடியில் உள்ள நெய்தேங்காய்இறைவனுக்கே அதனைப் பத்திரமாக இறைவனடிக்கு கொண்டு சேர்க்க வேண்டும் என்று குருசாமி சொல்லிவிடுவதால் அவ்விதமே சாமிகளும் சபரிகிரிசாஸ்தாவின் அபிஷேகத்திற்காகவெகு ஜாக்கிரதையுடன் கொண்டு செல்கிறார்கள். ஒருவனுக்குரிய பொருளை பத்திரமாக எந்தச் சூழ்நிலையிலும் பாதுகாத்து சேர்ப்பிக்க வேண்டும் என்ற மன உறுதி ஏற்படுகிறது.

9. சபரிமலை யாத்திரையில் முன்பின் அறியாத சாமிகள் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்வதும், மரியாதையுடன் பயபக்தியுடன் நடந்து கொள்வதும் யாத்திரையில் கலந்து கொண்டால் தான் தெரியும். நம் அரசியல் வாதிகள் அடிக்கடி கூறும் சோஷியல் சமுதாயம் ஐயப்ப பக்தர்களில் தான் உருவாகிறது

10. இறுதியாக ஒரு முக்கிய காரணம். இதனைச் சொல்லாமல் இருக்க முடியாது. நம் அரசியல் தாரக மந்திரமான குடும்ப கட்டுப்பாட்டுக் கொள்கை மறை முகமாக ஐயப்ப பக்தர்களால் கடைபிடிக்கப் படுகிறது. மிகவும் குளிர் காலமான கார்த்திகை, மார்கழி மாதங்களில் விரதம் இருப்பதால் அதுவும் கோடிக்கணக்கான பக்தர்கள் விரதமிருப்பதால் ஒரு குறிப்பிட்ட சதவிகிதத்தில் ஜனனத்தைக்குறைக்க முடிகிறது. மற்ற மாதங்களிலும் மனதையும், உடலையும் கட்டுப்படுத்த இது பயிற்சி ஆகிறது.

எந்த ஒரு அமைப்பிலும் நல்லவர்களும் இருப்பார்கள். கெட்டவர்களும் இருப்பார்கள். நல்லதும் நடக்கும். கெட்டதும் நடக்கும். ஒருசிலர் மனதைக் கட்டுப்படுத்த முடியாத விளையாட்டு மனப்பான்மையில் சிறுபிள்ளைத் தனமாக

மாலையணிந்துகொண்டு விரதத்தைச் சரிவர கடைப்பிடிக்காமல் நடந்து கொள்ளும் ஐயப்ப பக்தர்களை உதாரணத்துக்கு எடுத்துக் கொள்ளாதீர்கள். எதிலும் நல்லதை எடுத்துக் கொள்ளுங்கள். அல்லதை ஒதுக்கிவிடுங்கள். எதிலும் முதலில் ஒரு நம்பிக்கை வேண்டும். ஐயப்ப சக்தி உள்ளது என்று மனதில் நம்பிக்கை கொண்டு ஒரு முறை குருசாமி. சொல்கிறபடி விரதம் இருந்து மலை சென்று வாருங்கள். அடுத்த மலை வரும்போது நம்மவரில் ஒரு நாஸ்திகர் குறைந்து விட்டார் என்று நான் உறுதியாக கூறுவேன்.

சுவாமியே சரணம் ஐயப்பா.

ஆ. வீர. வி. சிவ. கி. சிவசுப்பிரமணியன் B.sc., BL.
அட்வகேட், சிவகங்கை

நன்றி: நாட்டரசன்கோட்டை
தீர்த்தார்குளம் அருள் மிகு தேசிகவி விநாயகர்கோவில்
திருக்குட நன்னீராட்டு விழா மலர்.

---

# நகரத்தார் புத்தக வங்கி மதுரை

புத்தகவங்கியின் நிர்வாக குழு கூட்டம் 9—7—89 அன்று நகர விடுதியில் நடைபெற்றது அக்கூட்டத்தில் வங்கிக்கு எல்லா வகையிலும் உதவி செய்யும் மதுரை நகரத்தார் சங்கத்திற்கும், நகரத்தார் குரல், நகரத்தார் மலர் நகரத்தார் இதழ் ஆசிரியர்களுக்கும் நன்றி தெரிவிக்கப் பட்டது.

மாணவர்கள் எண்ணிக்கை கூடியுள்ளதால் புத்தக எண்ணிக்கையை கூட்டுவது என்றும், அதற்கு நம் சமூகத்தினரிடம் வசூலிப்பது என்றும், ஒவ்வொரு வருடமும் ஒவ்வொரு மாணவரிடமும் சேவைக் கட்டணமாக ரூ. 20/- வசூலிப்பதென்றும், 1989 ஆகஸ்ட் முதல் ஒவ்வொரு ஆங்கில மாதத்திற்கு இரண்டாம் சனிக்கிழமைகளில் காலை 10 மணி முதல் 1 மணி வரை செயல்படுவதென்றும், ஒவ்வொரு உறுப்பினருக்கும் நான்கு புத்தகங்கள் வழங்குவதென்றும் பருவகால மாணவர்களின் வேண்டுகோளை ஏற்று ஜூலை 22, 23 தேதிகளில் மாலை 4-30 முதல் 6-00 வரை புத்தகம் வழங்குவதென்றும், வங்கியின் முதலாம் ஆண்டு விழாவை அக்டோபர் 2ந் தேதி சிறப்பாக நடத்துவது என்றும் தியாகராசர் கல்லூரி முதல்வர் சொக்கலிங்கம் ஆலோசனைப்படி மாணவர் கையேடு வெளியிடுவதென்றும், நகரத்தார் சங்கத்திலுள்ள புத்தகங்களை நிர்வாகத்தினரைச் சந்தித்து அந்தப் புத்தகங்களை மாணவர்கள் பயன்படுத்தும் பொருட்டு பெறுவது என்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டது.

## திருப்பரங்குன்றத்து பால்குடங்களும் காவடிகளும்

வருகிற ஆவணிமீ 8 உ (24–8–89) வியாழக்கிழமை காலை 5-30 மணிக்கு பால்குடங்கள் கட்டி 8-00 மணிக்கு பால்குடங்களும் காவடிகளும் நகர விடுதியிலிருந்து எடுத்து சென்று 10-00 மணி அளவில் திருப்பரங்குன்றம் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமிக்குச் செலுத்தப் பெறும் என்றும் அதனை ஒட்டிய எல்லா நிகழ்ச்சிகளிலும் நகரத்தார் பெருமக்கள் கலந்து கொண்டு சிறப்பிக்குமாறும் மதுரை நகரத்தார் சங்கத்தின் செயலாளர்கள் கேட்டுக்கொண்டுள்ளனர்.

### நிகழ்ச்சி விவரம்:

ஆவணி மீ 7 உ (23—8—89) புதன் கிழமை காவடி கட்டுதல்.

மாலை 6 மணிக்கு விநாயகப் பானை வைத்தலும் பக்திப் பாடல்கள் பாடுவதும்.

இரவு 8 மணிக்கு தீபாராதனை.

ஆவணி மீ 8 உ (24—8—89) வியாழக்கிழமை காலை 5-30 மணிக்கு பால்குடங்கள் கட்டுதல்.

காலை 8 மணிக்கு பால்குடங்கள் காவடிகளுடன் பக்தர்கள் திருப்பரங்குன்றம் புறப்படுதல்.

காலை 10 மணிக்கு காவடிகள் பாலகுடங்கள் செலுத்துதல்.

காலை .11 மணிக்கு திருப்பரங்குன்றம் விடுதியில் மகேஸ்வர பூஜை.

---

ஆடி மீ 9 உ (24—7—89) மாலை 6-30 மணி அளவில் பொதுக்காவடி எடுக்கச் சீட்டுக் குலுக்கப் பெறும்.

---

# கன்னிப் பெண்களின் கவனத்திற்கு

பழ. வள்ளியப்பன்,
தஞ்சை.

திருமணம் ஆக வேண்டி பிரார்த்தித்துக் கொண்டிருக்கும் கன்னிப் பெண்கள், தஞ்சை மாவட்டம் மாயவரத்தை அடுத்த குத்தாலம் நகரின் வடபால் மூன்று கல் தொலைவில் உள்ள திருமணஞ்சேரி என்ற சிற்றூரில் கோயில் கொண்டுள்ள அருள் வள்ளநாதர் அம்பிகை கோகிலாம்பாள் மற்றும் திருமண வரம் அருளும் அனுக்கிரக மூர்த்தியான கல்யாணசுந்தர் இவர்களை வணங்கினால் திருமணம் கைகூடாது தடைபட்டு நிற்பவர்கள் வெகு விரைவிலேயே திருமணமாகப் பெறுவர் என்பது இத்தல மகிமைகளுள் மிகப் பிரசித்தமானது. அவ்வாறு செல்பவர்கள் மஞ்சள், குங்குமம், பலகை, மஞ்சள், குடம், பத்தி, சர்க்கரை, தீப எண்ணெய், வெற்றிலை பாக்கு, வாழைப்பழம், எலுமிச்சம் பழம்-2, மாலைகள்-3, புஷ்பம், உதிரி புஷ்பம். சந்தனம், தேங்காய்-3 இவற்றைக் கொண்டு செல்லல் வேண்டும். பின் திருமணம் ஆனபின்பு பிரார்த்தனை செலுத்த வருபவர்கள் மேற்கண்ட சாமான்களுடன் மற்றொரு மாலையும், தேங்காய் ஒன்றும், சர்க்கரைப் பொங்கல் நிவேதனத்திற்கு வேண்டிய சாமான்களுடனும் செல்லல் வேண்டும்.

இத்திருத்தலத்தை வணங்கி, பெண்களுக்கு திருமணம் இனிதே நடக்க ''நகரத்தார் இதழ்'' சார்பில் வாழ்த்துகிறோம்.

---

மதுரை சக்தி சிவம் திரையரங்கு உரிமையாளர் இல்லத் திருமணம்.

மதுரை சக்தி·சிவம் திரையரங்கு உரிமையாளர் புதுவயல்;RM.M. அண்ணாமலை செட்டியார் அவர்கள் செல்வி சோலை (B.Sc.)க்கும், கோட்டையூர் டாக்டர் அண்ணாமலை செட்டியார் செல்வர் அண்ணாமலை என்ற சுரேஷ்B.Com.,M.BA.க்கும் 10—5—89 அன்று புதுவயலில் திருமணம் மிக சிறப்பாக நடைபெற்றது.

# பொதுச் செய்திகள்

## ஜுன், ஜுலை 89 - பொதுச் செய்திகள்

1) இன்னும் ஐந்து ஆண்டுகளில் ரூ. 200 கோடி செலவில் இராமேசுவரம் சுற்றுலா நகரமாகும். வர்த்தக சங்கத் தலைவர் தகவல்

2) பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டம் திருப்பத்தூரிலுள்ள அரசாங்க மருத்துவமனைக்கு மருதுபாண்டியர் பெயர் சூடப்படுமென்று மாவட்ட ஆட்சித் தலைவர் பழமலை அவர்கள் கூறினார்.

3) ஜுன் 26ந் தேதி தொலைக்காட்சியின் போக்கைக் கண்டித்து தி.மு.க. போராட்டம்.

4) செப்டம்பர் 30ந் தேதி இரண்டு புதிய மாவட்டங்கள் வடஆற்காடு மாவட்டம் இரண்டாக பிரிக்கப்படுகின்றது. திருவண்ணாமலையை தலைநகராகக் கொண்ட சம்புவராயர் மாவட்டம், வேலூரைத் தலைநகராகக் கொண்ட அம்பேத்கார் மாவட்டம்.

5) ஜுலை 12 டாக்டர் எம். ஜி. ஆர் மருத்துவப் பல்கலைக்கழகத் தொடக்கம்.

## வேலை வாய்ப்பு

1) சிக்மகளூரிலும், கூர்க்கிலும் உள்ள இரு எஸ்டேட்டுகளுக்கு கேஷியர் வேலைக்கு ஆங்கிலம் தெரிந்த நகரத்தார் இருவர் தேவை.

விண்ணப்பிக்க வேண்டிய முகவரி:

ஸ்ரீ ராஜேந்திரா மில்ஸ் லிட்,
அஞ்சல் பெட்டி எண் 901
சேலம் - 636009

2) மேலாளர் தேவை: கர்நாடக மாநிலம் சிக்மகளூர் மாவட்டத்திலுள்ள ஒரு பெரிய எஸ்டேட்டிற்கு ஆங்கிலம் நன்றாகப் பேச, எழுதத் தெரிந்த 45 வயதிற்குள் உள்ள மானேஜர் நகரத்தார் ஒருவர் தேவை.

விண்ணப்பிக்க வேண்டிய முகவரி:

ஸ்ரீ ராஜேந்திரா மில்ஸ் லிட்,
அஞ்சல் பெட்டி எண் 901
சேலம் - 636009